

# தனியொருவனுக்கு

பனியன் கைப்பிடி இழுக்கப்பட்டுச் சுந்தரம் விழித்துக் கொண்டான். சௌதாமினிதான் அவனை எழுப்பியிருந்தாள். “அப்பா வெளியிலே போய் ரொம்ப நேரம் ஆறதுங்க. கொஞ்சம் பாக்கறீங்களா?” என்று கவலையுடன் சொன்னாள்.

இருட்டில் வாசற்கதவு சிறிதே திறக்கப்பட்டுச் செங்குத்தாக ஒரு வெள்ளைக் கீறல் தெரிந்தது. சுந்தரம் இழுத்துப் போத்திக் கொண்டு, “சும்மா படுத்துக்க. அவரே வந்துடுவாரு” என்று சொன்னான்.

“அரை மணி போல ஆச்சுங்க. கொஞ்சம் பார்த்துட்டாத் தேவலை” என்று சௌதாமினி சொன்னாள்.

“ஐயோ, தொந்தரவு செய்யாதேயேன். மனுஷனைக் கொஞ்சம் தூங்கவிடு.” சுந்தரம் மீண்டும் தூக்கத்தில் ஆழ்ந்துவிட முயற்சி செய்தான். ஆனால் அவனே சிறிது நேரத்தில் விழித்துக் கொண்டு வாசல் கதவுப் பக்கம் பார்த்தான். அந்த வெள்ளைக் கீறல் இன்னும் தெரிந்தது. சௌதாமினியை உலுக்கினான், “ஏய், கதவைத் தாப்பாப் போடு!” என்றான்.

“அப்பா இன்னும் உள்ளே வரலியே?”

இப்போ சுந்தரம் போர்வையை உதறித்தள்ளி எழுந்து கொண்டான். “இன்னுமா வரலை?” என்று கேட்டான்.

“அதான் சொன்னேனே ரொம்ப நேரமா கதவைப் போடற துக்குத்தான் முழிச்சுண்டே இருக்கேன். ஆனா அப்பா வெளியிலே போனவரு இன்னும் உள்ளே வரலை.”

சுந்தரம் எழுந்து வாசல் கதவைத் தாண்டி வெளியே சென்று பக்கத்தில் இருந்த பாத்ரூம் கதவருகில் நின்று கொண்டு “அப்பா!” என்று குரல் கொடுத்தான். பதில் வராதிருக்கவே, “அப்பா!” என்று

சிறிது உரக்கக் கூப்பிட்டுக் கதவைத் தட்டினான். கதவு திறந்து கொண்டது. அந்த இருட்டிலும் பாத்ரூம் காலியாயிருந்தது. அங்கிருந்த வெள்ளைப் பீங்கான் தெளிவாகத் தெரிந்தது.

சுந்தரம் உள்ளே வந்து, "அப்பா பாத்ரூம்லே இல்லையே?" என்றான்.

சௌதாமினி பரபரத்து, "ஐயோ எங்கே போயிட்டாருங்க?" என்றாள்.

சுந்தரம் அடுத்த அறைக்குச் சென்று விளக்கைப் போட்டான். அங்கே அப்பா படுத்துக் கொண்டிருந்தார். விளக்கொளியில் கண்கள் கூசியவராக. "என்னப்பா சுந்தரம்?" என்று கேட்டார்.

"நீங்க உள்ளே வந்துட்டீங்களா?" என்று சுந்தரம் கேட்டான்.

"அப்பவே வந்துட்டேனே" என்று அவர் சொன்னார்.

சுந்தரம் விளக்கை அணைத்துவிட்டுப் பல்லைக் கடித்துக் கொண்டான். மீண்டும் முன்னறையில் தன் படுக்கையில் போய்ப் படுத்துக்கொண்டு, "ஏண்டி, அவர்தான் அப்பவே வந்துட்டாராமே" என்றான்.

"வந்துட்டாரா? வந்தவரு கதவைத் தாப்பாப் போடக் கூடாது?"

"அவர் எப்படிப் போடுவாரு? முண்டம், முண்டம். சரியாக் கவனிக்காம நடு ராத்திரீயிலே ஆளைத் தூங்க விடாமச் சாகடிக் கறியே?"

"நான்தான் சாகணும். தினம் தினம் இப்படித் தூங்க முடியாமத் திண்டாடினா நான்தான் சாகணும்."

"ஆமாம். வாய்க்கு வாய் சாகணும் சாகணும்னு சொல்றது. அவர் வெளியிலே போனதைக் கவனிச்சவ உள்ளே திரும்பி வந்ததையும் கவனிச்சிருக்கிறதுதானே?"

"எனக்கென்ன தெரியும்? நான் கண்ணசந்துட்டேன் போலேயிருக்கு"

"அதுக்கு என்னை ஏன் கழுத்தறுக்கறே?"

"நான் ஒண்ணும் கழுத்தறுக்கலே. வீட்டைத் திறந்தே போட்டு வையுங்க. இருக்கிற கொஞ்ச நஞ்ச சாமானையும் திருடன் அள்ளிட்டுப் போகட்டும்."

"போறும் போறும். உன் அருமையான வாயாலே வாழ்த்துப் பாடாதே. ஒரு தடவை திருட்டுப் போனதுக்கே இன்னும் வழி ஏற்படலை..."

சௌதாமினி தனக்குள் முணுமுணுத்த வண்ணம் சுருட்டிப் படுத்துக் கொண்டுவிட்டாள். இனிமேலும் சர்ச்சையை வளர்க்க மனமில்லாமல் சுந்தரம் எழுந்து வாசற் கதவைத் தாளிட்டான். அந்தக் கதவின் இரு தாழ்ப்பாள்களையும் சிறிது தந்திரமாகப் போட வேண்டும். அது அப்பாவால் முடியாது.

அவன் மீண்டும் படுக்கையில் சாய்ந்தவுடன் சௌதாமினி தீர்மானமாகச் சொன்னாள், "இதோ பாருங்க. இந்த பாத்ரூமை வீட்டுக்காரங்க கிட்டச் சொல்லி உள்ளே வைக்கச் சொல்லுங்க. இல்லே வேறே வீடு பாருங்க. இப்படி தினம் சிவராத்திரியா என்னாலே கண் விழிக்க முடியாது."

"சிவராத்திரி உனக்கு மட்டும்தானா! என்னையும்தானே கழுத்தறுக்கறே?"

"நான் என்ன கழுத்தறுத்தேன்? உங்கப்பா ராத்திரியிலே எழுந்து ஒண்ணுக்கிருந்துட்டு வந்தா நானாக் கழுத்தறுக்கறேன்?"

"சரி சரி, வாயை மூடு."

"நான் வாயை முடிட்டுத்தானே இருக்கேன். வீடு பார்த் தப்பவே ஒழுங்காப் பாத்திருந்தா இந்த வம்பே இருக்காது."

"என்னடி வம்பு? இந்த மாதிரி இடத்திலே மறுபடியும் வீடு கிடைக்குமா?"

"என்ன வீடோ வீடு. மாடிப் போர்ஷன்லே கக்கூசை வெளியில வைச்ச வீட்டை இங்கேதான் பார்க்கறேன்."

உள்ளே இருந்து அப்பாவின் குரல் கேட்டது. "என்னப்பா சுந்தரம்? இன்னும் தூங்கலியா?"

'ஆமாம், பெரிசாத் தூங்க விடறீங்களே.' என்று சுந்தரம் வாய்க்குள் சொல்லிக் கொண்டான். முப்பத்தைந்து வயதுக்கான மூப்பு அவனுடைய தூக்கப் பழக்க வழக்கங்களில் சிறிது சிறிதாக மாற்றங்கள் உண்டு பண்ணிக் கொண்டிருந்தது. இப்போது அவனே எழுந்து பாத்ரூமுக்குப் போய் வந்தான்.

சிறிது நேரத்தில் மறுபடியும் வாசல் கதவு தாழ்ப்பாள் விலக்கப்படும் சத்தம் கேட்டது. சுந்தரம் படுத்திருந்தபடியே பார்த்தான். மீண்டும் அப்பா. முந்தின இரவு வந்திருந்த ஒரு

விருந்தாளிக்காகச் செளதாமினி காப்பி கலந்து கொண்டு வந்து கொடுத்தாள். அவர் காப்பியே சாப்பிடுவதில்லை என்று நிர்த் தாட்சண்யமாக மறுத்த பிறகு அந்த ஒரு தம்ளர் காப்பியை அப்பாவிடம் கொடுத்தது எவ்வளவு தவறு என்று இப்போது தெரிந்தது. அப்பா வேண்டா வெறுப்பாகத்தான் குடித்தார்.

சுந்தரம் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொண்டான். பொழுது விடிந்தவுடன் அப்பாவை டாக்டரிடம் அழைத்துப்போக வேண்டும். அப்பாவுக்காக மட்டுமல்லாமல் தன் சுயநலத்துக்காக வும்தான்.

இம்முறையும் ஏனோ அப்பா வெகு நேரம் எடுத்துக்கொண்டார். அவர் திரும்பி உள்ளே வந்தாரா இல்லையா என்று நிச்சயமாகத் தெரியவில்லை. சுந்தரம் எழுந்து அடுத்த அறை விளக்கைப் போட்டான். அப்பா இல்லை. வாசல் கதவும் உள் தாளிடப்படாமல் மூடியிருந்தது. பாவம், அப்பா, என்ன சிரமப்பட்டுக் கொண்டி ருக்கிறாரோ?

அவன் அப்பாவைப் போய்ப் பார்க்கலாமா வேண்டாமா என்று யோசித்திருந்த நேரத்தில் காலிங் பெல் அடித்தது. அந்த வீட்டில் அது உரக்கச் செயல்படும் சாதனம். ஊரே அமைதியில் ஆழ்ந்திருக்கும் அந்த வேளையில் அதன் சத்தம் பட்டரைச் சம்மட்டி போலக் கேட்டது.

செளதாமினி, சுந்தரத்தின் அம்மா, வேலைக்காரப் பெண் எல்லாரும் விழித்துக் கொண்டு விட்டார்கள். சுந்தரம் விரைந்து சென்று கதவைத் திறந்தான். வெளியே அப்பா நின்றுகொண்டி ருந்தார்.

“என்னப்பா இது?” என்று சுந்தரம் கேட்டான்.

“கதவு மூடிண்டு திறக்கவே மாட்டேன்னுது.”

‘‘உங்களைத்தான் இழுத்து மூடிண்டு போகாதீங்கன்னு சொல்லியிருக்கேனேப்பா.”

“நான் மூடலேடா. அதுவா மூடிண்டுடிச்சு.”

இந்தக் கதவுவேறு ஒரு கழுத்தறுப்பு. தாளிடாமல் மூடினாலே எப்படி எப்படியோ சிக்கிக் கொள்ளும். அப்பா உள்ளே சென்ற வுடன் கதவைச் சரியாக மூட அதை ஒருமுறை முழுதாகச் சுந்தரம் திறந்தவன் ஒரு நிமிஷம் அப்படியே நின்றான். மாடி வீடுகள் நிறைந்த பகுதியாயிருந்தாலும் அங்கு எதிரே ஒரு சேரி

உருவாகியிருந்தது. அந்த வீட்டில் குடிபுகுந்து ஒரு மாத காலத்தில் அவன் அந்தச் சேரியைக் கவனிக்க நேரிட்டதில்லை. அப்பா மாலை நேரத்தில் ஒரு கப் காப்பி அதிகமாகக் குடித்த தன் விளைவாக அவன் அன்று அந்தக் குடிசைகளை முதல் மாடியிலிருந்து மங்கலான இரவு வெளிச்சத்தில் நிதானமாகப் பார்க்கச் சந்தர்ப்பம் நேரிட்டது.

எவ்வித அசைவோ சலனமோ இல்லாமல் அந்தக் குடிசைகள் சிறுசிறு திட்டுகள் போல் உறைந்து போயிருந்தன. ஆனால் நூற்றுக் கணக்கான மனித ஜீவன்கள் அக்குடிசைகளுக்கு உள்ளும் புறமும் சுவாசித்துக் கொண்டிருக்க வேண்டும். மனித உடலுக்கான எல்லா இயக்கங்களும் நிகழ்ந்து கொண்டிருக்க வேண்டும். அங்கும் அப்பா போலத் திண்டாடுபவர்கள் இருக்க வேண்டும்.

அது சரி, இந்தக் குடிசைகளுக்கான பாத்ரூம்கள் எங்கிருக் கின்றன? பல குடிசைகளுக்குப் பக்கத்தில் தட்டி மறைவு இருக்கும். அது குளிப்பதற்கு. வீடுகளுக்கு இருப்பதுபோல இந்தக் குடிசைகளுக்கும் கட்டுத்திட்டம் வைத்திருந்தால் இந்தக் குளியல் தண்ணீருக்குச் சீராக வாய்க்கால் வெட்டி விட்டு எல்லாத் தண்ணீரும் சாக்கடையில் போய்ச் சேர்ந்து விட ஏற்பாடு செய்யலாம். ஆனால் அப்படி நேர்வதில்லை. ஒவ்வொரு குடிசை யிடமும் ஒரு பள்ளம். மனிதர் குளிப்பதை ஒரே நேரத்தில் சுகாதாரமும் சுகாதாரமற்றதாகவும் மாற்றக்கூடிய பள்ளம். இது குளிப்பதற்கு. ஆனால் மறைவு தேவைப்படும் மற்றவைக்கு?

சுந்தரம் உள்ளே வந்து படுத்துக்கொண்டான். பொழுது விடிய இன்னும் மூன்று மணி நேரமாவது ஆகும். அதுவரை தூங்கலாம்.

ஆனால் தூக்கம் வரவில்லை. இனிமேல் தூக்கம் வருவது அவ்வளவு எளிதாக இருக்காது. முதுகுத்தண்டில் இலேசாக ஒரு வலி கிளம்பியிருக்கிறது. வயிறு பசிப்பது போலவும் இருக்கிறது. அரை குறையாக ஏப்பமும் கிளம்புகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக இந்தத் தலை கட்டுக்கடங்காத யோசனைகளால் வெடித்துக் கொண்டிருக்கிறது. எண் சாண் உடம்புக்கும் தலையே பிரதானம். எண் சாண் உடம்புக்கும் தலையே பிரதானத் தொல்லை.

சுந்தரம் தலைமீது ஒரு தலையணையைக் கவிழ்த்து மூடித் தூங்க முயன்றான். இந்த வயதில் தூக்கம் வர இவ்வளவு பாடுபட வேண்டியிருந்ததால் அப்பா பாவம், எவ்வளவுதான் திண்டாடிக் கொண்டிருப்பார்? நாசமாகப் போகிற கக்கூஸ்! இந்திய வீடுகள் சாஸ்திரத்தில் கக்கூஸ் என்ற பேச்சே கிடையாது. அந்த சாஸ்திர

காலத்து வீடுகள் இப்போது இல்லாமல் போகலாம். ஆனால் இன்றும் அங்கங்கு பழைய கோட்டைகளும் அரண்மனைகளும் இருக்கத்தான் செய்கின்றன. திருமலை நாயக்கர்மகால், செஞ்சிக் கோட்டை, எல்லாவற்றுக்கும் சிகரமாக ஃபதேபூர் சிக்ரி, என்கிற மத்திய கால நகரமே இப்போது இன்னும் பழுதடையாமல் அப்படியே இருக்கிறது. அந்த ராணிகளும் ராஜாக்களும் அவர் களுடைய எண்ணற்ற பணியாட்கள், அடிமைகளும் எப்படிச் சமாளித்தார்கள்? சரித்திரம் இதெல்லாம் பற்றி சொல்வதில்லை. அந்தப்புரத்துப் பெண்மணிகள் எங்கு குளிப்பார்கள். எப்படிக் குளிப்பார்கள் என்று மணக்க மணக்க 'கைடு'கள் விவரிக்கிறார்கள். குளிப்பதோடு உடல் சுத்தம் அடைந்து விடுகிறதா? இல்லாத தினால்தானே இந்த முதிர்ந்த வயதில் அப்பா மனங்குன்றிப் போகும்படி நடந்து விடுகிறது? மறுபடியும் வாசல் கதவு மெதுவாகத் திறக்கப்படும் சத்தம் கேட்டது. சுந்தரம் கையை நீட்டிப் பார்த்தான். சௌதாமினி தூங்கிக் கொண்டிருந்தாள். அப்பாதான் மறுபடியும் பாத்ரூமுக்குச் சென்று கொண்டிருக்கிறார். சுந்தரம் மெதுவாக, "அப்பா" என்று குரல் கொடுத்தான். பதில் கிடைக்கவில்லை. அப்பா வெளியே சென்றிருக்க வேண்டும்.

இன்று ஓரிரவிலேயே சுந்தரத்துக்குத் தெரிந்து அப்பா மூன்று முறை வெளியே போய்விட்டு வரும்படி நேர்ந்து விட்டது. சுந்தரத்துக்கு ஊரெல்லாம் கட்டணக் கழிப்பிடம் என்று கட்டி வருவது கவனத்துக்கு வந்தது. அவன் சிறுவனாக இருந்த போது அப்பாவும் அவனுமாக ஒருமுறை மவுண்ட் ரோடுக்குச் சென்றிருந்த போது இந்த வசதிக்காக அப்பா தேடியது நினைவுக்கு வந்தது. அப்போது அண்ணா சிலை இருக்கும் இடத்தில் பூமிக்குக் கீழே படி இறங்கிச் சென்றார்கள். அந்தப் புரியாத வயதிலும் சுந்தரத்துக்கு அங்கே செல்வது பயமெழுப்பியது. அப்போது அந்த இடத்தைப் பயன்படுத்துவதற்குக் காசு பணம் கிடையாது. இப்போது அம்மாதிரி இடங்களையெல்லாம் அகற்றி விட்டார்கள். புதிதாகக் கட்டணக் கழிப்பறைகள். வாசலில் பட்டியல். இதற்குப் பத்துக் காசு,. இதற்குப் பதினைந்து காசு. இதற்கு... இத்தோடு இன்னொரு அறிவிப்பையும் எழுதிவிடலாம்: காசு கொடுக்க முடியாதா? போ, ஒதுக்குப்புறமாக உள்ள சந்தையும் சுவரையும் தேடிப் போ! இதை ஆண்கள் செய்து விடலாம். பெண்கள்?

இந்தச் சேரிக்காரர்களிடம்தான் இதற்கெல்லாம் ஒவ்வொரு முறையும் பணம் காசு இருக்குமா? சேரியில்கூட வசிக்க முடியாமல் நடைபாதைகளிலும் தெருவோரங்களிலும் வாழ்க்கை நடத்துபவர்கள் என்ன செய்வார்கள்? முன்பாவது ஒரு சில

இடங்களே நாற்றமெடுக்கும் அசிங்கமாக இருக்கும். இனி ஊரே அப்படியாக வேண்டியதுதான்.

காலையில் எழுந்தவுடன் டீ குடிப்பதற்காகச் சில நாணயங் களைப் பத்திரப்படுத்தியவர்கள் இனிக் காலைக் கடன்களைக் கழிப்பதற்கும் காசு தயார் செய்துகொள்ள வேண்டும். மறை விடம் தேவைப்படும் போது அவர்களிடம் காசு இருக்க வேண்டும். அல்லது காசு இருக்கும் போது மறைவிடத்தை நாடிப் போக வேண்டும். உடல் இயக்கங்கள் கையில் இருக்கும் சில்லறைக்குத் தகுந்தபடி இயங்க வேண்டும். இது சாத்தியமா? இதுதான் சாத்தியமாக வேண்டுமென்றால் எவ்வளவு கொடுமை!

அப்பாவுடைய முனகல் கேட்டது. அவர் மெதுவாக உள்ளே நுழைந்து சுந்தரத்தைத் தாண்டி அவர் படுக்கும் இடத்துக்குச் சென்றார். சுந்தரம் ஓசைப்படாமல் எழுந்து வாசல் கதவைத் தாளிட்டு வந்தான்.

1981

